# பகவத்  பாதை

Bagavath Path

இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு

20-07-2013


## ஆங்கிலப் பேராசிரியர்

- ஸ்ரீ பகவத்

அவர் ஓர் ஆங்கிலப் பேராசிரியர். திடீரென ஒருநாள் அவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது.

அவர் தெருவுக்கு வந்து சத்தம் போட்டுப்பேசினார். "இறைவனைப் பார்க்கவேண்டியது எவ்வளவு அவசியம்! அதை விட்டுவிட்டு நீங்கள் எல்லோரும் எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள்? இறைவனைத் தேடி நீங்கள் எங்கேயும் அலைய வேண்டாம். என் வீட்டிலேயே அவரை உட்கார வைத்துவிட்டு வந்திருக்கிறேன். என்னோடு வாருங்கள் உங்களுக்கும் இறைவனைக் காட்டுகிறேன்".

இப்படி அவர் வருவோர் போவோரிடமெல்லாம் கூற ஆரம்பித்தார். அவரைக் கண்டு அனைவரும் நழுவ ஆரம்பிக்கவே அவர் அடுத்த கட்டத்துக்குப் போக ஆரம்பித்துவிட்டார்.

"எவ்வளவு நேரந்தான் உங்களிடம் அமைதியாகப் பேசுவது? இறைவனைப் பற்றித் தெரியாததால் நீங்கள் இப்படி நடந்துகொள்கிறீர்கள். ஆனால் இறைவனைப் பற்றித் தெரிந்துகொண்ட நான் சும்மா இருக்க முடியாது; இருக்கக்கூடாது. உங்களை எப்படியும் இறைவனிடம் கொண்டு சென்றே தீருவேன்" - என்று கூறி வருவோர் போவோரின் சட்டைகளைப் பிடித்து இழுக்க ஆரம்பித்துவிட்டார். சிலரை அடித்து மிரட்டவும் ஆரம்பித்துவிட்டார்.

அவருடைய நடவடிக்கைகள் எல்லை மீறிப் போகவும், அவருடைய உறவினராகிய நாம் அவரை நம் வீட்டிலுள்ள அவருடைய அறையிலேயே வைத்து வெளிப்பக்கமாகப் பூட்டிவிட்டோம்.

வெளியே வரமுடியாததால் அவர் தனது அறைக்குள்ளிருந்தபடியே கூச்சல்போட்டுக் கொண்டிருப்பார்.

"முட்டாள் பசங்களா? என்னையா பூட்டி வைக்கிறீர்கள்? இங்கே நான் மட்டும் தனியாக இல்லை. இறைவனும் என்னோடுதான் இருக்கிறார். மரியாதையாகக் கதவைத் திறந்து உள்ளே வந்து கடவுளைக் காணுங்கள்".

நாம் அவரது கூச்சல்களைக் கண்டு கொள்வதில்லை.

ஒருநாள் காலையில் தினசரிப் பத்திரிகையைப் பார்த்துக் கொண்டிருக்கிறோம். அது ஓர் ஆங்கிலப் பத்திரிகை. பத்திரிகைச் செய்தியைப் படிக்கும்போது அதில் போடப்பட்டிருக்கும் ஓர் ஆங்கில வார்த்தைக்கு பொருள் தெரியவில்லை. அந்த வார்த்தைக்கு பொருள் தெரியாமல் அந்தச் செய்தியைப் புரிந்துகொள்ள முடியவில்லை.

நாம் அடைத்து வைத்திருக்கும் ஆங்கிலப் பேராசிரியரை ஜன்னலின் வழியாகத் தொடர்பு கொண்டு அந்த ஆங்கில வார்த்தைக்கு அர்த்தம் சொல்லும்படி கேட்கிறோம். அவர் ஆங்கிலத்தில் புலமை உள்ளவர்; ஆங்கிலப் பேராசிரியர்.

உடனடியாக அவர் அந்த வார்த்தைக்கு சரியான பொருளைக் கூறிவிடுகிறார்.

இப்படி நாம் அவரை இதற்குமட்டும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

அதைவிட்டுவிட்டு, "கடவுளையும் கொஞ்சம் காட்டுங்களேன்", என்று அவரது அறைக்குள் நாம் நுழைந்துவிட்டால் என்ன ஆகும்?

"கடவுள் தெரிகிறாரா? நன்றாகப் பார். இப்படிப் பார், அப்படிப்பார்" - என்று நம்மை அடித்துத் துவைத்துவிடுவார்.

அவருடைய ஆங்கிலப் புலமையை மட்டும் பயன்படுத்துவதோடு அவருடன் நமது உறவை நிறுத்திக்கொள்ள வேண்டும்.



நமது செயல்பாட்டில் எது அகம், எது புறம் என்று வகைப்படுத்தத் தெரிந்து கொண்டால்மட்டும் போதும்.

அப்படிப் பிரித்துக் கொண்டால் மட்டுமே, எங்கு செயல்படுவது, எங்கு செயலற்றுச் சும்மா இருப்பது என்பது தெளிவாகும்.

- ஸ்ரீ பகவத்



இதுபோன்றுதான், நாம் நமது அணுகுமுறையை, அகம்-புறம் என்று பிரித்துக் கொண்டுள்ளோம்.

நாம் நமது மனதைப் பயன்படுத்தி நம்முடைய அனைத்து செயல்களிலும் ஈடுபடலாம்.

ஆனால் மனதைப் பயன்படுத்தி, மனதைச் சீரமைக்கும் செயலில் மட்டும் ஈடுபடக்கூடாது.

ஆங்கிலப் பேராசிரியரைப் பயன்படுத்தி, நமக்குத் தெரியாத ஆங்கில வார்த்தைக்குப் பொருள் கூறும்படிக் கேட்டு அவரை நாம் பயன்படுத்திக் கொள்ளலாம்.

அதை விட்டுவிட்டு, அந்த ஆங்கிலப் பேராசிரியரிடம், "நீங்கள் இப்படிப் பேசலாமா? இப்படி நடந்து கொள்ளலாமா? கடவுளைக் காட்டுகிறேன் என்றெல்லாம் நீங்கள் கூறக்கூடாது", என நாம் அவருக்கு உபதேசம் செய்யக்கூடாது. நமது உபதேசத்தால் அவரை நெறிப்படுத்த முடியாது.

நமது செயல்பாட்டில் எது அகம், எது புறம் என்று வகைப்படுத்தத் தெரிந்து கொண்டால் மட்டும் போதும்.

அப்படிப் பிரித்துக் கொண்டால் மட்டுமே, எங்கு செயல்படுவது, எங்கு செயலற்றுச் சும்மா இருப்பது என்பது தெளிவாகும்.

நமது ஆன்மிகப் போதனைகளைப் பொறுத்த அளவில் நமக்கு எத்தனையோ விதமான அனுஷ்டானங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அனுஷ்டானங்கள் எவற்றையும் செய்யாமல் அடுத்த கட்டத்துக்கு வருவது சிரமம்.

அனுஷ்டானங்கள் அனைத்தும் அகச் செயலையே ஊக்குவிக்கின்றன. அதுதான் நமக்கு ஆரம்பப் பாடமாக அமைந்துள்ளது. அதற்குப் பிறகுதான் சும்மாயிரு என்னும் முடிவுக்கு வருகிறோம்.

சும்மா இரு என்றால் என்ன?

எப்படி நாம் சும்மா இருப்பது?

சும்மா இருக்க நாம் என்ன செய்யவேண்டும்?

- இப்படி நாம் கேட்க ஆரம்பித்து விடுகிறோம். எதை எதையோ செய்து வந்தோம். அவற்றுள் ஒன்றாகவே சும்மா இருத்தலையும் கருதிவிடுகிறோம். நம்மையறியாமலேயே நாம், 'எதையோ செய்யவேண்டும்' என்னும் மாயையில் மாட்டிக் கொண்டுவிடுகிறோம்.

நேற்று நிகழ்ந்த சத்சங்கத்தின்போது அன்பர் ஒருவர் கேள்வியொன்றை எழுப்பினார். "இராமகிருஷ்ணபரமஹம்சர் நாம் எப்போதும் இறைவனையே பற்றிப் பிடித்துக் கொண்டிருக்க வேண்டும் என்று கூறுகிறாரே, அது பற்றி என்ன கூறுகிறீர்கள்?" - இவ்வாறு அவர் கேட்டார்.

இராமகிருஷ்ணரைப் பின்பற்றவேண்டிய கடமை அவரது சீடர்களுக்குத் தான் உள்ளது. அவரைப் பின்பற்றினால் அவரது சீடராகிக் கொள்ளலாம். நாம் இங்கு உங்களை எவருடைய சீடராக்கவும் விரும்பவில்லை. நீங்கள் ராமகிருஷ்ணரையும் கடந்து செல்லவேண்டும் என்பதுதான் நமது நோக்கம்.

ஆங்கிலப் பேராசிரியரின் அறையிலிருந்து புதிய நபர் ஒருவரின் குரல் கேட்கிறது, ""ஐயோ யாராவது என்னைக் காப்பாற்றுங்களேன்", என்று.

பேராசிரியர் அறைக்குள் வேறு எவரோ தெரியாமல், கதவைத்திறந்து மாட்டிக் கொண்டார் போலும் என முடிவு செய்து நாம் அவரது கதவைத் திறந்து உள்ளே செல்கிறோம்.

நாம் உள்ளே நுழையவும், "மாட்டிக்கொண்டாயா?" என்று கூறி, பேராசிரியர் நமது சட்டையைப் பற்றிப் பிடித்துக் கொள்கிறார்.

"குரலை மாற்றிப் பேசினால்தான் நீ உள்ளே வருவாய் என்று தெரியும். ஆகவே வேறு ஒருவருடைய குரலில் ஆபத்தில் மாட்டிக்கொண்டதைப் போல் கூறினேன். உனக்கு நான் கடவுளைக் காட்டாமல் விடப்போவதில்லை".

- இப்படி அவர் கூறுகிறார்.

இராமகிருஷ்ண பரமஹம்சர் தன்னைப்பற்றி இவ்வாறு கூறுவார்: "நான் ஒரு பலசரக்குக் கடைக்காரன். என்னிடம் எல்லாவித சரக்குகளும் கிடைக்கும். எது உனக்குத் தேவையோ அதை மட்டும் எடுத்துக்கொள்".

அந்த அன்பர் கூறியது, பக்தர்களுக்காக இராமகிருஷ்ணர் கூறியது. அதனை ஞானமார்க்கத்திலுள்ளவர்கள் எடுக்கத்தேவையில்லை.

அந்நிலையில் நாம் அடைவதற்கு எதுவுமே இல்லை என்பதைப் புரிந்து கொள்வதோடு நமது வேலை அனைத்தும் முடிந்து விடுகின்றது.

நாம் அடைவதற்கு எது இருந்தாலும் அது நமது செயலைத் தூண்டிவிடும்.

ஆன்மிகத்தைப் பொறுத்தவரையில், நாம் அடையவேண்டியது, விடவேண்டியது என ஒரு பெரிய பட்டியலே இருக்கிறது. அந்தப் பட்டியலில் உள்ளவற்றில் நாம் எந்த ஒன்றில் மாட்டிக்கொண்டாலும் சரி.

நாம் பேராசிரியரிடம் மாட்டிக் கொள்வோம்.

அந்தப் பட்டியலில் உள்ள சில விபரங்கள் ஒரு சராசரி மனிதனை வெகு சுலபமாகக் குழப்பிவிடும்.

"மனம் எப்போதும் அமைதியுடன் இருக்கவேண்டும்; போராட்டம் இருக்கக் கூடாது"

- இப்படி எவராவது கூறினால் நாம் என்ன கூறுவோம்?

"ஆம் சரிதானே" என்று கூறிவிடுவோம்.

"நான் என்ற உணர்வே இருக்கக் கூடாது. அஞ்ஞானிக்கு மட்டுமேதான் நான் என்ற உணர்வு இருக்கும்"

- இப்படி எவராவது கூறினாலும் நாம் "சரிதானே" என்று கூறிவிடுவோம்.

ஆனால் இவை அனைத்தும் பேராசிரியர் தனது குரலை மாற்றிப் பேசும் கதைதான்.

மன அமைதி போராட்டமற்றதன்மை, நான் அற்றநிலை, 'சும்மா இருத்தல்' என்று ஏதாவது ஒரு பெயரில் நாம் செய்வதற்கு எதுவோ இருப்பதாகக் காட்டிவிடுவார்.

நமது அகநிலையின் செயல்பாடுகள் அனைத்தும் அந்தப் பேராசிரியரின் செயல்பாடுகளைப் போன்றதே.

"நான் முழுமையான - ஆரோக்கியமான பைத்தியமாக இருக்க நான் எவ்வாறு நடந்துகொள்ளவேண்டும்?" - என்று ஒருவர் கேட்டால், நாம் என்ன சொல்வது?

பைத்தியத்தில், Perfect பைத்தியம், Imperfect பைத்தியம் என்று ஏதாவது உள்ளதா?

புறச்செயல்களைப் பொறுத்தவரையில் Perfection- முழுமைத்தன்மை - ஆரோக்கிய நிலை என்பது உள்ளது.

நமது அறிவைப் பயன்படுத்தி ஒரு வேலையை திறம்பட எவ்வாறு செய்வது என்பதை நாம் தெரிந்து கொள்வது அவசியமே.

Perfection - முழுமைத்தன்மை என்பது புறத்தைப் பொறுத்த அளவில் அவசியமே.

அதே Perfection முழுமைத்தன்மை அகத்தைப் பொருத்த அளவில் விஷமாகிவிடுகின்றது.

அகத்தைப் பொறுத்த அளவில் எந்த நிபந்தனையும் சரியானதல்ல. அது இப்படிச் செயல்படவேண்டும், அப்படிச் செயல்படவேண்டும் என்ற தீர்மானம் சரியானதல்ல. அங்கு சரி, தவறு, Perfection, Imperfection என எவையுமே கிடையாது.

ஒரு மருத்துவமனைக்கு அரசியல் பிரமுகர் ஒருவர் வருகை தந்தார். அங்கிருந்த இளைஞன் ஒருவனிடம் பேசினார். அவன் தன்னைப்பற்றிக் கூறினான்.

"என்னுடைய பெற்றோருக்கு என்னுடைய காதல் விவகாரம் பிடிக்கவில்லை. நாங்கள் ஒரு ஜாதி; நான் காதலித்த பெண் இன்னொரு ஜாதி. தடை விதித்தார்கள். தடையையும் மீறி காதலில் ஈடுபட்டதால் எனக்கு பைத்தியம் என்று பட்டங்கட்டி என்னை இந்த மருத்துவமனையில் சேர்த்துவிட்டார்கள். நான் காதலித்த பெண்ணுக்கு வேறு திருமணம் செய்ய முயற்சி செய்கிறார்கள். அந்தத் திருமணத்திற்கு நான் இடையூறு செய்துவிடக்கூடாது என எண்ணி இரண்டு பெற்றோர்களுமாகச் சேர்ந்து என்னை இங்கே அடைத்து வைத்திருக்கிறார்கள். நீங்கள்தான் என்னைக் காப்பாற்றி வெளியே கொண்டு வரவேண்டும்".

- அந்த இளைஞன் அந்தப் பிரமுகரிடம் வேண்டிக் கொண்டான்.

அந்தப் பிரமுகர் அவனைக் காப்பாற்ற தலைமை மருத்துவரைச் சந்திக்க விரும்பினார். அவர் மறுநாள் தான் வருவதாக மருத்துவமனையில் கூறிவிட்டார்கள்.

மறுநாள் வந்து தலைமை மருத்துவரைச் சந்தித்து ஆவன செய்வதாக அவர் அந்த இளைஞனிடம் உறுதி கூறிவிட்டு அவர் தனது காரில் ஏறினார்.

அப்போது எங்கிருந்தோ ஒரு கல் வந்து அவருடைய கார் கண்ணாடியை உடைத்தது. அவர் பதறிப்போய் வெளியே வந்து பார்த்தார். அந்த இளைஞன் தான் கையை அசைத்துக்காட்டினான்.

"சார் மறந்து விடாதீர்கள். நாளை கண்டிப்பாக வாருங்கள். நினைவூட்டுவதற்காகத்தான் கல்லை விட்டெறிந்தேன்".

இப்படி நாம் ஆங்கிலப் பேராசிரியருடைய குரலை சிலவேளைகளில் நம்பிவிடுகிறோம்.

அகத்தளவில் நாம் அடைவதற்கு ஏதோ ஒரு நிலை இருக்கிறது என்று கூறி நமது மனது நம்மை நம்ப வைத்து விடுகிறது.

ரமணர் சொன்னார், ஜே.கே. சொன்னார், ஓசோ சொன்னார், புத்தர் சொன்னார், சாஸ்திரங்கள் சொல்கின்றன.

- என்று முத்திரைகுத்தி நமக்கு அடைவதற்கு எதையோ காட்டிவிடுகிறது.

"நாம் அடைவதற்கு எதுவுமே இல்லை" என்பதை நமக்குள் நாம் புரிந்துகொண்ட நிலையில் நம் மனம் அமைதிப்படுகிறது.

அந்த அமைதியும் நிரந்தரமாக இருக்கவேண்டும் என எண்ணும்போது

- புதுவிதமான இன்னுமொரு அடைவிடம் உருவாகிவிடுகிறது.

ஒவ்வொரு கணந்தோறும் புதிதுபுதிதாகக் கிடைக்கும் செய்தியை வகைப்படுத்தி நமக்கு உதவி செய்ய முன்வருகிறது

- நமது அறிவு.

துரதிஷ்டவசமாக, அகத்தைப் பொறுத்த அளவில், அது என்ன உதவி செய்தாலும், அதுவே, அதற்கு எதிராக அமைந்து விடுகிறது.

நமது அறிவு, அறிவோடு செயல்பட்டாலும் சரி, அறிவில்லாமல் செயல்பட்டாலும் சரி,

அது அகத்தைச் சீரமைக்கும் நோக்கம் உடையதாயின்

அது ஆங்கிலப் பேராசிரியரின் அகச் செயல்பாடு என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

அகத்தைப் பொறுத்தவரையிலும்

ஆங்கிலப் பேராசிரியரின் செயல் முழுவதும் அறிவற்ற செயல் என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும்.

அங்கு நாம் எடுத்துச் செயல்படுதற்கு எதுவுமே இல்லை என்பதைப் புரிந்து கொள்ளவேண்டும்

எப்படிச் செயல்பட்டால் நல்ல பைத்தியம்?

பைத்தியம் எப்படி வேண்டுமானாலும் செயல்படலாம்.

அகத்தைப் பொறுத்த வரையில்

நாம் எதனை இலக்காகக் கொண்டாலும் சரி

எதை அடையவேண்டும் என்றாலும் சரி

எதை விடவேண்டும் என்றாலும் சரி

- அனைத்துமே தவறானது.

அங்கு சரியான செயல் என்று எந்த ஒரு செயலும் கிடையாது.

அங்கு எந்தச் செயலை, நற்செயலாக எடுத்துக் கொண்டாலும்,

அது நம்மை அகத்தளவில் நிரந்தரமாக்கும் முயற்சியே.

அகத்தளவில் நிரந்தரத் தன்மை என்பது இயற்கைக்கு விரோதமானது; உண்மைக்குப் புறம்பானது.

நிரந்தரமாக்குதல் அனைத்தும், கட்டுப்படுத்தும் முயற்சியே.

கட்டுப்பாடுகள் அனைத்தும் இயற்கைக்கு முரணானதே.

சுதந்திரம் ஒன்றே உண்மையுடன் தொடர்புடையது.

நமது மன இயக்கத்துக்கு நாம் எந்த அளவில் சுதந்திரம் கொடுக்கிறோமோ,

அந்த அளவில் நாமும் சுதந்திரம் அடைகிறோம்.

ஏனெனில் நாம் – நான் என்பதும்

இந்த மன இயக்கத்தின் அங்கமே.

“நமது மன இயக்கம் எப்படி இயங்கினாலும் சரியே” என நாம் அதற்கு முழு சுதந்திரம் வழங்கும்போது

நாமும் அந்த சுதந்திரத்தை சுவீகரித்துக் கொள்கிறோம்.

அகச்சுதந்திரமே அகச்சரணாகதியாக அமைந்துள்ளது.

சும்மா இருத்தல் என்பது

அகம் சம்பந்தமாக நாமாகச் செய்ய எதுவுமே இல்லை என்பதுதான்.

நாமாக எதுவும் செய்யாத நிலையில் நமது அகச்செயல்கள் அனைத்தும் தற்செயல்களாக - தாமாக நடப்பதாக அமையும் போது தான்

– அது சும்மா இருப்பதாகும்.

அகச் செயல்கள் அனைத்தும் நம்மை மீறிய செயல்களாக எடுத்துக் கொள்வதே சும்மா இருப்பதாகும். ★

## இதற்காகவா இத்தனை ஓட்டம்!!

ஞானமடைந்த பின் புத்தர் பார்க்க விரும்பிய ஒரே பெண்மணி அவரது மனைவி!

அவரிடம் கூட சொல்லிக் கொள்ளாமல் அரண்மனையை விட்டு வெளியேறியதில் அவருக்குள் குற்ற உணர்ச்சி இருந்து வந்தது.

அரண்மனைக்குச் சென்று தந்தையை வணங்கிவிட்டு மனைவியைப் பார்க்க அந்தப்புரத்திற்குள் நுழைந்தார். இருவரும் சிறிது நேரம் பேசிக்கொள்ளவேயில்லை. புத்தரைப் பார்த்ததும் அவரது மனைவி லேசாக விசும்பினாள். பின் நிறுத்திக் கொண்டாள்.

புத்தர், தான் அவளிடம் சொல்லாமல் சென்றதற்காக, வருத்தம் தெரிவித்துவிட்டு திரும்பிப் போக எத்தனித்தார்.

அப்போது அவர் மனைவி அவரை தடுத்து நிறுத்தி, "புத்தர் பிரானே, நீங்கள் சொல்லாமல் போனதைப் பற்றி எங்களுக்கு வருத்தமில்லை. ஆனால் நீங்கள் தேடிய ஞானத்தை இங்கு இருந்து கொண்டே தேடியிருக்க முடியாதா என்ற ஒரு கேள்வி தான் என்னை உறுத்திக் கொண்டேயிருக்கிறது" என்றாள்.

புத்தரும் சிறிது யோசனைக்குப் பிறகு, "ஆமாம். அது சாத்தியம் தான்" என்றார்.

“பின் ஏன் நீங்கள் அவ்வாறு செய்யவில்லை?” என்றாள் மனைவி.

"ஏனென்றால் அதற்கு முன்பு எனக்கு அது சாத்தியம் என்று தெரியாமல் போயிற்று!" என்றார்.

உண்மை என்பது எப்போதும் எளிமையாகத்தான் இருக்கிறது. இருந்தாலும் அடைவது ஏன் சிரமமாக இருக்கிறது? சிரமத்திற்கு காரணம் அதன் இயல்பு அல்ல. நாம் எளிமையாக அதை அணுகாததே காரணம்.

எந்த ஒன்றையும் சரியான அணுகுமுறையில் அணுகும்போது அது எளிதான ஒன்றாகிவிடும். எளிதான ஒன்றையும் தவறான அணுகுமுறையில் அணுகும்போது அது மிகவும் சிரமமான ஒன்றாக ஆகிவிடுகிறது.

இதுவரை அடைவதற்கு மிகக் கடுமையானதாகக் கருதப்பட்ட ஞானம், சாதாரண மனிதர்களும் அடைந்து பயன்பெறும் வகையில் பகவத் ஐயாவின் சரியான அணுகுமுறையால் எளிமையாக்கப்பட்டுவிட்டது.

திரு. சரண்குமார்,
Zen Sung அக நூலகம்,
திருச்சி. செல் : 98940-12639

## ஜனகனிர் புரிதல்

ஜனகர் அஷ்டவக்ரரிடம், "எனக்கு மன அமைதியைத் தந்து அருள வேண்டும்" என்கிறார்.

அதற்கு அஷ்டவக்ரர் "அதற்காக நீ எதையும் செய்ய வேண்டியதில்லை மன்னா. அமைதி வேண்டும் என்பதற்காக நீயாக எதையெல்லாம் செய்கிறாயோ அது அத்தனையையும் இன்றுடன் நிறுத்து. அமைதி என்பது தாமாகவே கிட்டும்...

“நீ அதைத் தேடிக் கொண்டு போனால் அது உன்னை விட்டு விலகிக் கொண்டே போகும். ஆகவே மன அமைதிக்காக நீயாக எதுவும் செய்யத் தேவையில்லை என்பதைப் புரிந்துகொள். அமைதி உனக்குள்ளேயே தானாகவே உருவாகும்” என்றார் அஷ்டவக்ரர்.

ஜனகருக்கு புரிதல் ஏற்பட்டு அமைதி அடைந்தார்.

## ?கேள்வி பதில்¿

கேள்வி : எனக்கு மட்டும் ஏன் இன்னும் ஞானம் கிடைக்கவில்லை?

என்னோடு தியானப் பயிற்சியில் ஈடுபட்ட பலரும் தங்களுக்கு ஞானம் கிடைத்துவிட்டது என்று பெருமையாகச் சொல்லிக்கொள்கிறார்கள். அவர்களுக்கு பல வருடங்கள் முன்பிருந்தே தியானம் செய்யும் எனக்கு ஏன் அவர்கல் சொல்வதுபோல் வாய்க்கவில்லை?

ஐயாவின் ஞானவிடுதலை அல்லது பிற நூல்கள் படித்தவர்கள் பலரும் என்னிடம் வந்து தான் ஞானம் அடைந்துவிட்டதாகக் கூறும்போது எனக்கு மனசே வெறுத்துவிடுகிறது. இரமணர் கூறுவது போல் அதற்கு எனக்குப் பிராப்தம் இல்லையா?

அது ஏன் எனக்கு மட்டும் எட்டாக் கனியாகவே உள்ளது?

எனக்குள் எத்தனையோ தீய எண்ணங்கள் உள்ளன. அதிலிருந்து வெலிவரமுடியாமல் நான் நாளும் போராடிக் கொண்டுதான் இருக்கிறேன். கோபப்படக்கூடாது என்று கட்டுப்பாட்டோடு இருப்பேன். ஆனால், ஒரு சிலர் பேச்சைக் கேட்கும்போது பட்டென்று கோபம் வந்துவிடுகிறது.

ஆசைகளை வென்று வெற்றிவீரனாக நடக்கணும் என்றுதான் நினைக்கிறேன். ஆனால் ஏதோ ஒரு பொருளை அல்லது சிலரைப் பார்க்கும்போது ஆசை தானாய் வந்துவிடுகிறது. ஜோசியர் கூட ஏதோ பெண் சாபம் இருக்கிறது என்று சொன்னார். அந்த கர்மவினை தான் நம்மை அந்த ஆசையிலிருந்து விடுபட முடியாமல் தடுக்கிறதோ?

'உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன் பொருளை கள்ளத்தால் கள்வேம் எனல்' – என்று வள்ளுவர் சொல்லியிருக்கிறது நன்றாகவே புரிகிறது. ஆபீசிலோ வியாபாரத்திலேயோ பொய்யைச் சொல்லியாவது காசு சம்பாதிச்சுரணும்னு தோணுது.

இவ்வளவு போதாதுன்னு எங்க அக்கா மகனுக்கு தொழில் கத்துக்குடுத்து கடை வைத்துக்கொடுத்தேன். அவன் இப்போது எனக்குப் போட்டியாகவே என் பார்டிகளையே வளைச்சுப் பிடிக்கிறான். அவனைப் பார்த்தா வெட்டிவிடலாமான்னு இருக்கிறது.

சரி தான் எனக்கு ஏன் ஞானம் வரலேங்கிற காரணத்தை நானே அடுக்கிட்டே போகிறேன். எனக்கு ஏன் ஞானம் வரலேன்னு உங்ககிட்டயே கேட்டால் எப்படி? சரி, சொல்லுங்க. இந்த குப்பை செத்தை எல்லாம் சுத்தம் பண்ணினாத்தானே எனக்கு ஞானம் வரும். சரி தானே?

பதில் : நாம் சேர்த்து வைத்துள்ள பழைய கருத்துக்கள் – அவை உயர்ந்த ஆன்மீகப் பயிற்சிகளாய் இருந்தாலும் சரி – மிகக் குப்பையான, தவறான எண்ணங்களாய் இருந்தாலும் – இரண்டும் நம் மனதைப் பொறுத்த அளவில் சமமான பாதிப்பையே ஏற்படுத்துகின்றன.

ஆன்மீக நினைவுகள், அனுபவங்கள் உயர்ந்தவை; எனவே அவற்றைப் பற்றிப் பிடிக்க வேண்டும் என்று ஆசைப் படுவதும், தீய எண்ணங்கள் காம, குரோத, மத, மாச்சரியங்கள் மிகவும் மோசமானவை; எனவே அவற்றை வேரோடு பிடுங்கி எறிய வேண்டும் என்று ஆசைப்படுவதும் – இரண்டு ஆசைகளும் மனதைப் பொறுத்தவரை ஒன்றுதான்.

ஒவ்வொரு நிகழ்வு நடக்கும் போதும் – நல்லதோ, கெட்டதோ – ஒரு அனுபவம் ஏற்படுவது இயற்கை. அது ஞானிக்கும் ஒன்று தான். அஞ்ஞானிக்கும் ஒன்றுதான்.

நல்ல அனுபவம் ஏற்படும் போது அந்த மகிழ்ச்சியான அனுபவமே நீடித்திருக்க வேண்டும் என்று ஆசைப்படுவது என்பது அல்வாவை மட்டுமே சாப்பிட்டுக் கொண்டிருக்க வேண்டும் என்பதைப் போன்றது. தொடர்ந்து அல்வாவை ஒருவர் உங்களுக்கு வற்புறுத்தி கொடுத்துக் கொண்டிருந்தால் என்ன செய்வீர்கள்? அவரைத் தான் முதல் எதிரியாகப் பார்ப்பீர்கள். உடல் மற்றும் மனதைப் பொறுத்தவரை எந்த அனுபவத்துக்கும் எல்லை உண்டு. அது இனிமையான அனுபவமாயினும் சரி; துன்பமான அனுபவம் ஆயினும் சரி.

ஒரு நிகழ்ச்சி நடக்கும் போது நமக்கு ஏற்படும் அனுபவத்தின் ஆயுள் அரை நொடிதான். அடுத்த நிகழ்ச்சி நடக்கும் போது மனது தன்னிச்சையாக அடுத்த அனுபவத்திற்குப் போய்விடுகிறது. இது இயல்பாக நடப்பது.

ஆனால் ஏதோ ஒரு அனுபவம் நீடித்திருக்க வேண்டும் அல்லது நீங்கிவிட வேண்டும் என்று போராடும் போது கடந்து போன அனுபவம். இறந்து போன அனுபவம் மீண்டும் உயிர் பெறுகிறது. இயல்பாக ஓடி முடிந்திருக்க வேண்டிய அனுபவத்தை மீண்டும் கொண்டுவரும் போராட்டம் மனதில் ஆரம்பமாகி விடுகிறது. அப்படிப் போராடுகின்ற மனது தெளிவில்லாமல் கலங்கித் திரிகிறது.

போராடுகின்ற மனதை, போராடாத மனமாக மாற்றிவிட்டால் அதுதான் ஞான நிலை, அதற்கு என்ன செய்ய வேண்டும்? எனக்கு இந்த குணம் வேண்டும். அந்த குணம் வேண்டாம். எனக்கு இந்த அனுபவம் வேண்டும். அந்த அனுபவம் வேண்டாம் என்று ஆசைப்படாமல் இருந்தால் போதும். இத்தகைய ஆசையைப் பற்றிதான் புத்தரும், 'ஆசையே துன்பத்திற்குக் காரணம்' என்றார்.

நம் இயல்புக்கு ஏற்பவும், சூழ்நிலைக்கு ஏற்பவும் ஒவ்வொரு எண்ணங்களும், அனுபவமும் வரும். பின் அதுவே போய்விடும். நாம் வேண்டும் என்று நினைத்தோ, வேண்டாம் என்று நினைத்தோ அதைக் கையில் எடுத்துக்கொண்டால் பிறகு போராட்டம் துவங்கிவிடும் அத்தகைய எண்ணங்களையும், அனுபவங்களையும் நாம் ஆதரித்தும் தீர்க்க முடியாது, எதிர்த்தும் தீர்க்க முடியாது என்று புரிந்து கொண்டு, அவற்றின் போக்கில் தலையிடாமல், சும்மா இருந்தால் போதும். அதுவே ஞானநிலை.

அப்போது எல்லா எண்ணங்களும், அனுபவங்களும் தங்கு தடையற்ற பிரவாகமாக ஓடத்துவங்கும். எத்தனை பரம்பரையில் சேர்த்த அழுக்குகளானாலும், எத்தனை ஜென்மங்களாய் சேர்த்த கர்மாக்கள் ஆனாலும், அந்தப் பிரவாகத்தில் அடித்துச்செல்லப்படும்.

நீங்கள் ஞானத்தெளிவடைந்து இயற்கையான பிரவாகத்தை அனுமதித்தாலே போதும். உள்ளும் புறமும் தூய்மையாகிவிடும். நீங்கள் சொந்த முயற்சியில், தனிப்பட்ட திறமையை நம்பி, இந்தக் குப்பைகளையெல்லாம் சரி செய்கிறேன் என்று புறப்பட்டால் அது இமாலயப் போராட்டமாகிவிடும். ஜன்ம ஜன்மங்களுக்கும் போராட்டம் தொடரும். சுத்தம் செய்வதை அந்தப் பிரவாகத்தின் பொறுப்பில் விட்டுவிட்டால் நடப்பது தெரியாமல் நடத்திவிடும்.

சுத்தம் செய்தபின் ஞானமடைவது போராட்ட வழி; ஞானம் அடைந்தபின் சுத்தமாவது. அது இயற்கை வழி.

Dr. நா. கைலாசம்
தலைவர்,ஸ்ரீ பகவத் மிஷன்
செல் : 94432 90559

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

சென்னையில் 7-7-2013 அன்று வெஸ்ட் மாம்பலத்தில் "ஆன்மாவைத் துறந்து ஆன்மாவாக இரு" என்ற தலைப்பில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் சிறப்புரை ஆற்றினார்கள். பல ஆன்மிக அமைப்பைச் சேர்ந்த அன்பர்கள் கலந்து பயனடைந்தனர். இதனை பகவத் மிஷன் சென்னை மையம் ஏற்பாடு செய்திருந்தது.

மேலும் 14-7-2013 அன்று தாம்பரம் பகுதியில் அமைந்துள்ள மனவளக்கலை மன்றத்தில் "ஆன்ம ஞான இரகசியம்" என்ற தலைப்பில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் சிறப்புரை ஆற்றினார்கள்.

பகவத் ஐயா அவர்களின் நூல்களையும் உரைகளையும் கேட்டுத் தெளிவடைந்தவர் பலர். அவர்கள் தங்களது மகிழ்ச்சியையும், நன்றியையும் தெரிவித்து வருகின்றார்கள்.

பகவத் ஐயா அவர்கள், ஞானத்தெளிவை மனோதத்துவ ரீதியாக கொடுக்கப்பட்ட நூல்தான் "கவலைகள் அனைத்திற்கும் தீர்வு". இந்நூல் ஆன்மிகம் சாராத அன்பர்களுக்கும் ஞானத்தெளிவைக் கொடுக்கும் நூலாக அமைந்துள்ளது. தற்போது உள்ள பரபரப்பான வாழ்க்கை சூழ்நிலையில் பல இளைஞர்கள் தங்கள் பணி நிமித்தமாகவும், எதிர்காலத்தைப் பற்றிய பயத்தின் காரணமாகவும் மன அழுத்தத்திற்கு ஆளாகி இருக்கிறார்கள். அவர்கள் அனைவருக்கும் சரியான தீர்வைக் கொடுக்கும் நூலாக இருக்கிறது. எனவே இந்நூல் உலக மக்கள் அனைவரும் படித்து பயன்பெறவேண்டும் என்ற உயர்நோக்கில் பகவத் ஐயா அவர்களே ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்துக் கொண்டிருக்கிறார். எனவே இந்நூல் ஆங்கிலத்தில் மிக விரைவில் வெளிவர இருக்கிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

மேலும் ஆகஸ்ட் 15 முதல் 19 வரை நடைபெறவுள்ள சேலம் முகாமிற்கு விண்ணப்பங்கள் வந்துள்ளன. அனைத்து விண்ணப்பங்களும் ஏற்கப்பட்டு அவர்களுக்கு தகவல் தெரிவிக்கப்பட்டுள்ளது. விண்ணப்பித்தும் தகவல் பெறாதவர்கள் செல் : 9994205880, 9789165555 என்ற எண்ணில் தொடர்பு கொண்டு விபரம் பெறுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

இந்த முகாமில் ஞானத்தெளிவோடு, உடற்பயிற்சி சம்பந்தமான சில நுணுக்கங்களையும் கற்றுக்கொள்ளபோகிறோம். பகவத் ஐயா மற்றும் தேனி ஸ்வாமி ஆகியோருடன் தங்கியிருந்து நாம் பெற்ற தெளிவில் உறுதிபெறுவோம்.

அன்புடன்,
K.S. ஜீவமணி, ஆசிரியர்,
செல் : 97891-65555



சென்னையை அடுத்த ஆலாத்தூர் என்ற கிராமத்தில் அமைந்துள்ள உதவும் நண்பர்கள் அமைப்பில் இருக்கும் ஆதரவு அற்றோர்களுக்கு ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் ரூபாய் 5000 மற்றும் உணவுப் பொருட்களும் வழங்கப்பட்டன.

அங்கு இயங்கும் நூலகத்திற்கு ஐயாவின் நூல்கள் அனைத்தும் இலவசமாக வழங்கப்பட்டன.

## சேலம் முகாம்

அன்புடையீர்,

நமது சேலம் முகாம் இயற்கை எழில் கொண்ட மலைகள் சூழ்ந்த தோட்டத்தில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இங்கு தங்கும் வசதி சற்றுக் குறைவாக இருப்பதால் ஆண்கள் தங்குவதற்கு ஒரு கூடமும், பெண்கள் தங்குவதற்குத் தனிக் கூடமும் மட்டுமே உள்ளன. தனி அறைகள் கிடையாது.

ஸ்ரீ பகவத் ஐயா மற்றும் தேனி ஸ்வாமிகளுடன் தங்கியிருந்து நாம் பெற்ற தெளிவில் உறுதிபெற்று உண்மையை தரிசிக்க வரும் நம் அனைவருக்கும் சிறுசிறு குறைபாடுகளும், இடையூறுகளும் ஆன்மீகப் பயிற்சியின் ஒரு அங்கம்தானே!!!

மேலும் இந்த முகாமிற்கு வந்த விண்ணப்பங்கள் அனைத்தும் ஏற்கப்பட்டு தகவல் தெரிவிக்கப்பட்டுள்ளது. விண்ணப்பித்து தகவல் வராதவர்கள் செல் : 9994205880, 9789165555 என்ற எண்ணில் தொடர்பு கொண்டு தகவல் பெற வேண்டுகிறோம்.

முகாம் ஆரம்பிக்கும் நேரம் காலை 10-00 மணி.

ரூட் (வழி) : சேலம் இரயில் நிலையம் ⟶ புதிய பஸ் நிலையம் ⟶ பழைய பஸ் நிலையம் ⟶ வாழப்பாடி (அ) ஆத்தூர் செல்லும் வழியில் ⟶ அயோத்தியாப்பட்டணம் ⟶ ஆத்தூர் ரோட்டில் மகா இன்ஜினியரிங் கல்லூரி எதிர்புறம் உள்ள சின்னகவுண்டாபுரம் பிரிவு சாலை வழியாக ⟶பெரியகவுண்டாபுரம்⟶கொடம்பக்காடு (மண்ரோடு கடைசி) ⟶ பிரவாகம் முகாம் நடைபெறும் இடம்

15-8-2013 அன்று காலை பேருந்திலோ, இரயிலிலோ காலை 10-00 மணிக்குள் வருபவர்கள் மட்டும் கீழ்க்கண்ட விலாசத்தில் வந்து இறங்கலாம். அங்கு தங்கும், குளிக்கும் வசதிகள் உள்ளன.

அம்ருதா ஹோமியோபதி மருத்துவமனை, (ஸ்ரீபகவத் மிஷன் சேலம் கிளை அலுவலகம்), சரஸ்வதி தெரு, அத்வைத ஆஸ்ரமம் ரோடு, (சேலம் புதிய பஸ் நிலையம் எதிரில்) சேலம். செல் : 94432-90559. அங்கிருந்து 10 மணிக்கு வேன் புறப்பட்டு "ப்ரவாகம்"-முகாம் மையம் செல்லும்.

பங்கேற்பாளர்கள் கவனத்திற்கு :

1. கண்டிப்பாக டார்ச் லைட் கொண்டு வரவும்.
2. குளிருக்கு கதகதப்பான ஆடை தேவைப்படுபவர்கள் கையோடு எடுத்து வரவும். (விரிப்பு, தலையணை, போர்வை ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது)
3. பொதுவான மருந்துகள் கிடைக்கும். உங்கள் தேவைக்கு சிறப்பு மருந்துகள் தேவைப்படின் கையோடு கொண்டு வரவும்.

மேலும் விபரங்களை பெற செல் : 9994205880, 9789165555 என்ற எண்களில் தொடர்பு கொள்ளவும்.

## ஐயாவுடைய நிகழ்ச்சி

16-07-2013 முதல் 12-08-2013 வரை மற்றும்21-08-2013 முதல் அடுத்த அறிவிப்பு வரும் வரை
திருச்செந்தூர் - செல் : 99442 15677

15-08-2013 முதல் 19-08-2013 வரை சேலம் - செல் : 99942-05880, 97891-65555

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 3-8-13 சனி | வாழ்க வளமுடன் மினி ஹால், புதிய எண் 28/11, 2-வது தெரு, வசந்த் & கோ எதிர்புறம், 4-வது மெயின் ரோடு, நங்கநல்லூர், சென்னை-16. | **தன்னை அறியும் ஞானம்,** மாலை 6-00 to 8-30 மணிவரை | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம் செல் : 98840-97438 |
| 4-8-13 ஞாயிறு | ஸ்ரீ கிருஷ்ணா ஹால், 68, டீச்சர்ஸ் காலனி, 3-வது குறுக்குத் தெரு, கஸ்தூரிபா நகர், அடையார், சென்னை-20. | **தன்னை அறியும் ஞானம்,** மாலை 5-30 to 8-30 மணிவரை | ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையம் செல் : 98840-97438 |

## ஜென் கதை
## கருத்துச் சுமை

அவர் ஒரு தத்துவப் பேச்சாளர். அவர் சொற்பொழிவைப் பலரும் விரும்பிக் கேட்பார்கள். அவரது சொற்பொழிவுகள் ஆன்மிக ஞானத்தை வளர்க்குமென்றும், ஆன்ம தாகத்தைத் தணிக்கும் என்றும் பெரும்பாலானவர்கள் பாராட்டினார்கள்.

அவரது சொற்பொழிவுகளில் மட்டுமல்லாமல் அன்றாட வாழ்வில் பேசும் இயல்பான பேச்சுக்களில் கூட நிறையத் தத்துவங்கள் கலந்துவரும். புத்தர், மகாவீரர் எனப் பெரிய ஞானிகள், முனிவர்கள் இவர்களது சொற்களையெல்லாம் மேற்கோள்காட்டி அவரது பேச்சு அமைந்திருக்கும்.

ஒரு முறை அவர் வீதியில் நடந்து போய்க்கொண்டிருந்த போது அவரது காலணி பட்டென அறுந்துவிட்டது. மெல்ல இழுத்து இழுத்து நடந்து சென்று அவர் சாலையோரம் இருந்த செருப்பு தைக்கும் தொழிலாளியை அணுகினார்.

"அப்பா! எனது காலணி அறுந்து விட்டது",

தொழிலாளி அதை எடுத்துத் திருப்பிப் பார்த்தான். இரண்டு காலணிகளுமே பல இடங்களில் நைந்து போய் இருந்தன. "வைத்துவிட்டுப் போங்கள் ஐயா, சரி செய்து வைக்கிறேன். நாளை வந்து வாங்கிக்கொள்ளுங்கள்", என்றான் பணிவாக.

"என்னது? நாளைக்கா?" இழுத்தார் பேச்சாளர்.

"ஆம், ஐயா கையிலுள்ள வேலைகளை முடித்துவிட்டுப் பிறகுதான் உங்கள் வேலையைப் பார்க்கமுடியும். அதிலும் இதில் நிறைய வேலை இருக்கிறது" என்று தன் நிலைமையை விளக்கினான் அவன்.

"ஒரு நாள் முழுவதும் காலணிகள் இல்லாமல் எப்படியப்பா நடப்பது?" வேகமாக வந்தது பேச்சாளரின் கேள்வி.

"ஒரு நாளைக்குத்தானே! வேறு இரண்டு காலணிகள் தருகிறேன். அவற்றை தற்காலிகமாக உபயோகித்துக்கொள்ளுங்கள்". அவருக்கு உதவ முன்வந்தான் தொழிலாளி.

"என்ன?" சீறினார் பேச்சாளர், "அடுத்தவன் காலணிகளை என் கால்கள் சுமப்பதா? அப்படி சொல்ல எப்படி மனம் வந்தது உனக்கு?" சினத்துடன் கேட்டார் அவனை பார்த்து

செருப்புத் தொழிலாளி சிரித்தான். பிறகு அவரை பார்த்துக் கேட்டான்,

"அடுத்தவர் கருத்துகளையெல்லாம் தலையில் சுமந்து திரிந்து கொண்டிருக்கும் நீங்கள் அடுத்தவர் காலணிகளை ஒருநாள் சுமப்பதில் என்ன ஆகிவிடப் போகிறது?" என்று

பேச்சாளர் வாயடைத்துப்போனார். அத்துடன் அவரிடமிருந்து தத்துவங்களும் விடைபெற ஆரம்பித்தன.

உதட்டால் உச்சரிப்பதை விடவும் உள்ளத்தால் உணர்ந்ததை உச்சரிப்பது தான் உயர்வு என உணர்ந்தார் பேச்சாளர்.

"உணர்ந்ததை மட்டும் ஓது".




ஜென் கதை 'கருத்துச் சுமை'

**Book packet** containing printed books

To



*If undelivered please return to:*
Sri Bagavath Mission
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India. Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem-636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.